REGD. No. TN 18 (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) * Phone 812818 * 4 பக்கம் விலை 30 காசு



**நம்பிக்கை**

நமது மன உறுதியும் பலமும்மட்டுமேமனித குலத்தின் நம்பிக்கைக்கு உயிர்நாடியாக இருக்க முடியும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**அறிவு**

அறிவையும் பொறுமையையும் தக்க சமயத்தில் உபயோகித்தால் எவராலும் தகர்க்கவே முடியாத சக்தி வந்து சேரும்.

அண்ணல் காந்தி



(*) மலர்: 2 (★) சென்னை 10—9—1978 ஞாயிறு () (★) () வெளியூர் 11—9—1978 திங்கள் (*) இதழ் 321 (★)

# அமைச்சர் வாஜ்பாயி சோவியத் பயணம்: 7 நாள் சுற்றுப்பயணம்

**புதுடெல்லி, செப். 10-மத்திய அமைச்சர் வாஜ்பாயி இன்று (ஞாயிற்றுக்கிழமை) ரஷியா புறப்பட்டார். அவர் ரஷியாவில் 7 நாட்கள் சுற்றுப்பயணம் செய்கிறார்.**

முன்னதாக அமைச்சர் வாஜ்பாயி புதுடெல்லி விமான நிலையத்தில் நிருபர்களிடம் பேசியதாவது:

'சில குறிப்பிட்ட உலகப் பிரச்சினைகள் பற்றியும் இரு நாடுகளுக்கிடையே உள்ள நட்புறவை வலுப்படுத்துவதற்கான நடவடிக்கைகள் குறித்தும் சோவியத் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துகிறேன்.

அடுத்தமாதம் (அக்டோபர்) சீனாவுக்குச் செல்லலாம் என நினைக்கிறேன். வழியில் தாஷ்கண்டுக்கும் செல்வேன்.

வருகிற 18ந்தேதி காபூலுக்குச் செல்கிறேன். ஆப்கானிஸ்தான் தலைவர்களுடன் பல்வேறு பிரச்சினைகள் குறித்து பேசுகிறேன். வருகிற 20ந்தேதி தாயகம் திரும்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் வாஜ்பாயி கூறினார்.

சோவியத் யூனியனுக்கு வாஜ்பாயி செல்வது இது இரண்டாவது தடவை.

'போர்த் தடுப்புப் பற்றி சோவியத் தலைவர்களுடன் வாஜ்பாயி பேசுவார்.

''இந்தியாவின் உண்மையான நண்பன் சோவியத் யூனியன்'' என்று வாஜ்பாயி குறிப்பிட்டார்.

## சுக்லா கைது

போபால், செப். 10-முன்னாள் மத்திய அமைச்சர் வி. சி. சுக்லா உள்பட பலர் மத்தியப் பிரதேச சட்டமன்றக் கட்டிடத்துக்குமுன்பு ஆர்ப்பாட்டம் செய்ததாக கைது செய்யப்பட்டனர். கைதானவர்கள் ஜாமீனில் போக மறுத்ததால் மாஜிஸ்திரேட்முன்பு ஆஜர் செய்யப்பட்டனர்.

கலாச்சாரத் துறைக்கு

## தனி இலாகா: ஆர். எம். வீ. தகவல்

சென்னை, செப். 10-''செய்தி, மக்கள் தொடர்புத் துறையுடன் திரைப்படத் தொழில் சுற்றுலா, இயல் இசை நாடக மன்றம், மற்றும் நுண்கலைக் குழு ஆகியவற்றை இணைத்து கலாச்சாரத்துக்கு என்று ஒரு தனித்துறை அமைக்கும் கருத்து பரிசீலனையில் இருந்து வருகிறது'' என்று மேலவையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

*

## அறிவழகன் செனட் உறுப்பினராக தேர்வு

சென்னை, செப். 10-சென்னை பல்கலைக் கழக செனட் உறுப்பினராக மேலவைக் கொறடா அறிவழகன் தேர்ந்தெடுக்கப்பட்டார். மேலவையிலிருந்து அறிவழகன் (கழகம்) திண்டிவனம் ராமமூர்த்தி (இந்திரா காங்.) ஆகிய இருவரும் சென்னை பல்கலைக் கழக செனட் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்த அறிவிப்பை மேலவையில் தலைவர் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. நேற்று வெளியிட்டார்.



## ஜாதி உணர்வுகள் தலைதூக்கவே விடக்கூடாது

# புரட்சித்தலைவர் முழக்கம்



**சென்னை, செப். 10- ஜாதி உணர்வுகள் எந்த நிலையிலும், எப்போதும் எங்கும் தலைதூக்க நாம் அனுமதிக்கக் கூடாது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

கவிஞர் முத்துராமலிங்கத்திற்கும் புஷ்பத்திற்கும் சென்னை தியாகராயநகர் வாணி மகாலில் இன்று காலை திருமணம் நடைபெற்றது.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் மலர் மாலையை மணமகன் முத்துராமலிங்கத்திடம்கொடுத்து மணமகள் கழுத்தில் அணிவிக்கச்செய்தார். மற்றொரு மாலையை மணமகள் புஷ்பத்திடம் அளித்து மணமகன் கழுத்தில் அணிவிக்கச்செய்தார்.

பிறகு முதல்வர்புரட்சித் தலைவர் மங்கலநாணை மணமகன் முத்துராமலிங்கத்திடம் கொடுத்து, மணமகள் புஷ்பத்தின் கழுத்தில் அணிவிக்கச்செய்தார்.

மணமக்கள் இருவரும் முதல்வர் புரட்சித்தலைவரின் மலர்ப் பாதங்களில் விழுந்து வணங்கி ஆசி பெற்றனர்.

மணமக்களை வாழ்த்தி தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:

நான் ஏற்கனவேஇரண்டு திருமணங்களில் கலந்து கொண்டுவிட்டு இந்த திருமணத்திற்கு வந்திருக்கிறேன். இன்னும் ஒரு திருமணத்திற்குச் செல்ல வேண்டியிருக்கிறது. நான் கடைசியில் பேசுவது தான் முறை.



மணமகன்
கருணமூர்த்தி எம்.எல்.ஏ



மணமகள்
வனிதா



மணமகன்
இ. முத்துராமலிங்கம்



மணமகள்
எஸ் எம், புஷ்பம்

### வெறும் வாய்க்கு அவல்

நான் அடுத்த திருமணத்திற்கு போகவில்லையென்றால் வெறுவாயை மெல்லுகிறவர்களுக்கு அவல் கிடைத்ததுபோல் ஆகிவிடும்.

கலப்புத் திருமணம் என்று சொல்லுகிறார்கள். இனிமேல் இப்படி சொல்லிக் கொள்வதை நிறுத்திக் கொள்ள வேண்டும். ஜாதி ஒழிய வேண்டும் ஜாதியே கூடாது என்று சொல்லி-நடந்து வருகிற நாம்-இன்ன ஜாதி-இந்த ஜாதி என்று சொல்லுவதன் மூலம் ஜாதிக்குநினைவு சின்னம் வைத்தாற்போன்ற நிலை ஏற்படுகிறது அந்த நிலையைப் போக்க வேண்டும்.

முத்துராமலிங்கத்திற்கும் புஷ்பா முத்துராமலிங்கத்திற்கும் திருமணம் நடந்து முடிந்திருக்கிறது இரு மனமும் கலந்த கலப்புமணம் என்று இந்த மணத்தைக்குறிப்பிடலாம் இன்று முத்துராமலிங்கத்திற்கு மறுவாழ்வு தொடங்குகிறது என்று நம்புகிறேன்.

அவர் மக்கள் தொடர்பு அதிகாரியாக வேலை பார்த்து வந்த நேரத்தில் நம்முடைய கழகம் தொடங்கப் பட்டபோது நான்வேலையைவிட்டு கட்சிப்பணிக்காக வருகிறேன்என்றுநா. காமராசனுடன் என்னிடம் வந்து கேட்டார்

கட்சியே இப்பொழுது தான் தொடங்கப்பட்டிருக்கிறது. ஆபத்துக்கள் நிறைய இருக்கிறது தங்களுடைய உயிரையும் தியாகம் செய்யத் தயாராக இங்கே பலபேர் இருக்கிறார்கள்.

நீங்கள் மக்கள் தொடர்புஅதிகாரியாகவே இருங்கள் மக்களிடம் செல்லும்போது நாட்டில் உள்ள உண்மை நிலையைச் சொல்லுங்கள் என்று சொன்னேன்.

அந்த உரிமையையெனக்கு அவர் தரமாட்டார்கள். அவர்கள் என்னை வெளியேற்றுவதற்கு பதிலாக என் கொள்கைக்காக நான் வெளியே வந்து விடுகிறேன் என்றார்.

சரி மூன்று மாதம் பொறுங்கள் என்றுசொல்லி அனுப்பினேன். மூன்று மாதம் கழித்து வந்தார். இன்னும் மூன்று மாதங்கள் பொறுங்கள் என்று சொல்லி அனுப்பினேன்.

அதன்பிறகு அவர்''நாங்கள் வெளியே வந்துவிட்டோம். கட்சியில் பணியாற்றுகிறோம்'' என்றார். அந்த உணர்வை நான் என்றுமே மறந்தவன் அல்ல.

நீங்கள் (முத்துராமலிங்கம்) இதுவரை எத்தனையோ தொண்டுகளைச் செய்திருக்கலாம். அதற்குப் பின்னால் யாராவது பாதிக்கப்படுகிறார்களா என்பதை இதுவரை உணராமல் இருந்திருக்கலாம்.

இளைஞரான அவரது உணர்ச்சியில் சிலர் வேகத்தைப் பாய்ச்சிமாற்றத்தை ஏற்படுத்தி இருந்தார்கள்.

இனிமேல் எடுத்து வைக்கிற ஒவ்வொரு அடியின் போதும் குடும்பத்தையும், குடும்பத்தலைவியையும் நினைத்துப் பார்க்காமல் இருக்கமுடியாது.

இதுவரை அவர் தனி மனிதன். இன்று முதல் அவர் ஒரு குடும்பத்தலைவன்

விரைவிலே அவர் ஒரு பொறுப்பு ஏற்க வேண்டியிருக்கும். அந்த பொறுப்புக்கு ஏற்றவராக நடக்க வேண்டும்.

நல்ல மணமகனாக, நல்ல குடும்பத்தலைவனாக, கலவ தியாகியாக எதிர்காலத்தில் நல்ல தலைவனாக வரவேண்டும்.

மணமகள் புஷ்பாவும் நல்ல பொறுப்பிலே பணியாற்றுகிறார். உழைத்துச் சம்பாதிக்கும் நிலையில் இருவரும் இருக்கிறார்கள். இருவருமே கலப்புமணத்தைக் குறிப்பிடும் ...

இருவரும் தயக்கமோ கலக்கமோ இல்லாமல் எந்தப் பிரச்சினையையும் உட்கார்ந்துபேசித்தீர்த்துக் கொள்ளவேண்டும்.

இவர்களைப் போல் இணையவேண்டிய இளைஞர்கள் நாட்டில் நிறைய பேர் உள்ளனர். எதிர்காலத்தில் அவர்களுக்கு நல்ல உணர்வை ஏற்படுத்தும் வகையில் இவர்கள் வாழ்ந்துகாட்ட வேண்டும்.

உங்களுக்கு என்னுடைய தாயின் ஆசி எப்பொழுதும் கிடைக்கும்'' இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

மணமக்களை வாழ்த்தி நிதியமைச்சர் நாஞ்சில்லார் கூட்டுறவுத்துறை அமைச்சர் கே.ஏ.கே., சிறுதொழில் அமைச்சர் ராஜாமுகமது பாவலர் முத்துசாமி, எஸ். எஸ். ஆர். தேசிய பார்வர்டுபிளாக் கட்சி சட்டமன்ற உறுப்பினர் கே. கந்தசாமி ஆகியோர்

(4 ம பக்கம் பார்க்க)

அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவிப்பு

## விழுப்புரம் கலவரம்: ரூ1.86லட்சம் செலவில் நிவாரணப்பணிகள்

**சென்னை, செப். 10-- விழுப்புரம கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு மதப் பாகுபாடில்லாமல் ரூபாய் ஒரு லட்சத்து 86 ஆயிரம் செலவில் நிவாரணபபணிகள் செய்யப்பட்டன**

மேலவையில் அப்துல் வகாப் கொடுத்திருந்த கவனஈர்ப்புத் தீர்மானத்துக்கு பதிலளிக்கையில் அமைச்சர் எஸ். டி. எஸ். பேசியதாவது:

25-7-78முதல் 28-7-78 வரைவிழுப்புரத்தில்நடந்த கலவரத்தில் பாதிக்கப்பட்ட ஏழைக் குடும்பங்களுக்கு உடனடியாக 10 கிலோ அரிசியும் 5 லிட்டர் மண்எண்ணெயும் கொடுக்க அரசு உத்தரவிட்டது இது தவிர நிவாரணப்பணிகளை சரிவர கவனிக்க சிறப்பாக ஒரு துணை ஆட்சியாளரும் அவருக்குத்தேவையான பணியாளர்களும் அமர்த்தப்பட்டனர்.

முதலமைச்சர் பொது நிவாரண நிதியிலிருந்து ஒரு லட்சத்து 86 ஆயிரத்து 400 ரூபாய் வழங்கி குடிசையிழந்த 286 குடும்பங்களுக்கு ரூ. 400வீதமும் இக்கலவரத்தில் இறந்தவர்களின்12குடும்பத்தினருக்கு ரூ. 6 ஆயிரம் வீதமும், கொடுக்க அரசு ஆணையிட்டது.

மதம் சாதி பார்க்காமல் நிவாரணத்தொகை பாதிக்கப்பட்டவர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.



வாளேந்திப் போராட வகையற்று இருந்தோரை தன் பாவேந்தி போராட வைத்த பாவேந்தன் மகாகவி பாரதி நாமம் வாழ்க! வாழ்க!!

# டெல்லி இரட்டைக் கொலை: திடுக்கிடும் தகவல்கள் அம்பலம்

**புதுடெல்லி, செப் 10—டெல்லியில் நடந்த இரட்டைக் கொலை சம்பந்தமாக நாடு முழுதும் போலீசாரால் தேடபபட்டு வந்த பில்லாவும், ரங்காவும் ராணுவ வீரர்களிடம் பிடிபட்டனர்.**

பில்லாவும், ரங்காவும் ஆக்ராவிலிருந்து டெல்லி செல்லும் கல்கத்தா மெயிலில் செல்லும்போது அவர்களை ராணுவ வீரர்கள் பிடித்துக் கொடுத்தனர்.

கல்கத்தா மெயிலில் ராணுவ வீரர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த ரயில் பெட்டியில் யமுனை ஆற்றுப் பாலத்தின் மீது ரயில் போகும்போது இவர்கள் இருவரும் ஏறினார்கள்.

ராணுவ வீரர்கள் அவர்களை அடையாளம் கண்டுபிடித்து டெல்லி ரயில்நிலையப் போலீசாரிடம் ஒப்படைத்தனர்.

பில்லா,ரங்கா இருவரிடமும் இருந்து கீதா, சஞ்சய் இருவரையும் கொலை செய்யப் பயன்படுத்திய ஐந்தரை அங்குலகத்தியுடன் கார்சாவி, கார் ஓட்டும் லைசென்ஸ் விமானப் பயணப்பை ஆகியவை கைப்பற்றப் பட்டன.

### பம்பாய் கொலையில் தொடர்பு

சமீபத்தில் பம்பாயில் கொலை செய்யப்பட்ட 2 அரேபியர்களின் கொலையில் இவர்களுக்குத் தொடர்பு இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

3 கொலைகள்மற்றும்பல வழிப்பறிக் கொள்ளைகள் சம்பந்தமாகப் போலீசார் பில்லாவை விசாரித்து வருகின்றனர்.

பில்லாவுக்கு சுசிலா (வயது21) என்ற மனைவி உண்டு. அவள்குஜராத்தைச் சேர்ந்தவள் பம்பாயில் வசித்து வந்தாள்.

### சென்னையில் பில்லா

கடந்த செப்டம்பர் மாதம் ஜெயிலில் இருந்து தப்பியபில்லா எப்படியோ பம்பாயிலிருந்து சுசிலாவை அழைத்துக் கொண்டுவந்து சென்னை அண்ணா நகரில் குடும்பம் நடத்தினான்.

பின்னர் பம்பாயில் பில்லாவைப் போலீசார் கைது செய்தனர். அதைத்தொடர்ந்து சென்னைக்கு வந்து சுசிலாவையும் கைது செய்து அவளிடமிருந்து பம்பாயில் திருடப்பட்ட நகைகளைப்பறிமுதல்செய்தனர்.

மீண்டும் கடந்த மே 1ந் தேதி சிறையிலிருந்து தப்பிய பில்லா, டெல்லி கொலைவழக்குசம்பந்தமாக 3-வது முறையாக கைது செய்யப்பட்டிருக்கிறான்.

கீதாவையும்சஞ்சையையும் ததுகான் தான் என்று பில்லா ஒப்புக்கொண்டான்.

### பில்லாவை பார்க்க மக்கள் கூட்டம்

பில்லாவை கைதுசெய்து டெல்லியிலுள்ள தாரியா கஞ்ச் என்ற இடத்தில் உள்ளபோலீஸ் நிலையத்தில் வைத்திருந்தனர். பில்லா கைதான செய்தி பரவியது. மக்கள் அவனைக் காண போலீஸ்நிலையம் முன் திரளாகக் கூடியிருந்தனர்.

கூட்டம் மாலையில் கலைந்து போய்விடும் என போலீசார் எதிர்பார்த்தனர். ஆனால் மாலை 7 மணிக்கு மேலும் மக்கள் கூட்டம் கலையாததால் போலீஸ் நிலையத்திற்கு மாஜிஸ்திரேட்டை வருமாறு போலீசார் கேட்டுக் கொண்டனர்.

அதன்படி மாஜிஸ்திரேட் பி. கே. ஜெயின் போலீஸ் நிலையத்திற்கு சென்றார்.

அவர் முன்பு பில்லாவும் ரங்காவும் ஆஜர் படுத்தப்பட்டனர். அவர்களை விசாரணைக்காக 10நாள் போலீஸ் காவலில் வைக்க மாஜிஸ்திரேட் உத்தரவிட்டார்.

### ராணுவ வீரருக்கு பரிசு

பில்லா, ரங்கா இருவரையும் பிடித்துக் கொடுத்த ராணுவ வீரர்கள் காந்தி, ஏ. வி. ஷெட்டி, கோகுல் சிங், குர்தேக்சிங் ஆகிய நால்வருக்கும் டெல்லி போலீசார் பம்பாய் போலீசார், கப்பல்படையினர் மற்றும் சில நிறுவனங்கள் சேர்ந்து 50 ஆயிரம்ரூபாய் பரிசளிக்கின்றன.

### கீதாவின் பாட்டி மரணம்

கொலை செய்யப்பட்ட கீதா சஞ்சயின் பாட்டி (தந்தையின் தாய்) சரஸ்வதிஅம்மாள் (வயது75) தனதுபேரன்பேத்திகொலையுண்ட செய்தி கேட்டு அதிர்ச்சியினால் உடல்நலம் இல்லாமல் இருந்துவந்தார். அவர் பஞ்சாப் மாநிலத்திலுள்ள சண்டிகரில் மரணம் அடைந்தார்.

# 15 இடங்களில் மீன் பிடி துறைமுகம் அமைப்பு: எட்மண்ட் தகவல்

சென்னை, செப். 10- 15 இடங்களில் மீன் பிடி துறைமுகங்கள் அமைப்பது பற்றி பரிசீலித்து வருவதாக அமைச்சர் எட்மண்ட் குறிப்பிட்டார்.



மீன் மற்றும் மீன் பொருள்கள் ஏற்றுமதி மூலம் மத்திய அரசுக்கு கிடைக்கின்ற அந்நியசெலாவணியைக்கொண்டு தமிழ் நாட்டில் கடலோர மீன் பிடித்தொழிலை ஊக்கப்படுத்துமாறு தமிழக அரசு மத்திய அரசை வற்புறுத்தி வருகிறது என்று உணவு அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் சட்டமன்றத்தில் தெரிவித்தார்.

இதுபற்றி மேலும் கூறுகையில் தமிழ்நாட்டில் 15 இடங்களில் கடற்கரையில் மீன்பிடித் துறைமுகங்கள் அமைக்க துறைமுக ஆய்வுக்குழு ஒன்று அமைக்கப்பட்டது.

இந்த ஆய்வுக்குழு ஆய்வு நடத்தி 15 இடங்களில் மீன்பிடித் துறைமுகங்களை அமைக்க அறிக்கை அளித்தது.

அந்த அறிக்கையை ஆய்வு செய்த நேரத்தில் இதற்கு பலகோடி ரூபாய் செலவாகும் என்றநிலையில் திட்டம்கைவிடப் பட்டது' என்று அமைச்சர் எட்மண்ட் தெரிவித்தார்.

தாமரைக்கனி: தமிழ் நாட்டிலிருந்து மீன், இறால், கருவாடு போன்றவற்றை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதின் மூலம் பல கோடி ரூபாய் அந்நியச் செலாவணி கிடைக்கிறது.

அதைக்கொண்டு இந்த மீன்பிடித் துறைமுகங்களை அமைக்கும்படி மத்திய அரசை இந்த அரசு வற்புறுத்துமா?

## அந்நியச் செலாவணி

அமைச்சர் எட்மண்ட்: உறுப்பினர் எடுத்துச் சொன்னதுபோல பல கோடி ரூபாய் அந்நியச் செலாவணி கிடைக்கிறது.

மீன்பிடித் துறைமுகங்களுக்கு தேவையான உதவிகளை மத்திய அரசு செய்ய வேண்டியதுஅவசியம்தான் மத்திய அரசை இந்த அரசு தொடர்ந்து வலியுறுத்தி வருகிறது.

தமிழ்நாட்டில் சென்னை, செங்கற்பட்டு, தென்ஆற்காடு, தஞ்சாவூர், திருநெல்வேலி, வடாற்காடு, ராமநாதபுரம், மதுரை கன்னியாகுமரி, ஆகிய 9 இடங்களில் மாவட்ட மீனவ கூட்டுறவு சம்மேளனங்கள் இயங்கி வருகின்றன என்று மற்றொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் எட்மண்ட் தெரிவித்தார்.

சம்மேளனங்களின்மூலம் மீனவர்களுக்குத் தேவையான நைலான் வலை. இன்னும் மீன் பிடித் தொழிலுக்கு தேவையான பொருள்கள் வியாபாரத்துக்கு தேவையான நிதி வசதி ஆகியவை செய்யப்படுகின்றன என்றார் அமைச்சர்.

டாக்டர் சமரசம்: (கழகம்) தருமபுரி மாவட்டம் பகுதிகளுக்காக மாவட்ட மீனவ கூட்டுறவு சம்மேளனம் அமைக்கப்படுமா?

அமைச்சர் எட்மண்ட்: சம்மேளனம் அமைப்பதற்கு தேவையான சாத்தியக்கூறுகள் வசதிகள், ஆகியவற்றை பரிசீலனை செய்து சம்மேளனம் தொடங்குவதற்கு இந்த அரசுக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை.

காளிமுத்து பங்கேற்பு

## மாநகராட்சி பூங்காவில் டெலிவிஷன்

சென்னை, செப். 10- சென்னை நகரபூங்காக்களில் தொலைகாட்சிப் பெட்டிகள் அமைக்கும் திட்டத்தின் கீழ் செனாய்நகர் திரு. வி. க. பூங்காவில் வருகிற 12ந் தேதி (செவ்வாய்க்கிழமை) மாலை 6 மணிக்கு தொலைக் காட்சி பெட்டி இயக்கி வைக்கப்படுகிறது.

விழாவிற்கு உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து தலைமை வகிக்கிறார். அமைச்சரின் மனைவி நிர்மலா காளிமுத்து தொலைக்காட்சிபெட்டியை இயக்கி வைக்கிறார்.

ஜயண்ட்குரூப்ஆப் மதராஸ் ஆதரவுடன் ஜயகோபால் கரோடியா தர்மஸ்தாபனம்இந்தத்தொலைக் காட்சிப் பெட்டியை மாநகராட்சிக்கு வழங்கியுள்ளது.

அமைச்சர்குழந்தைவேலுதகவல்:

# கரும்புக்கு அதிக விலை தருக: மத்திய அரசுக்கு கோரிக்கை

சென்னை, செப். 10— சர்க்கரை ஆலைகளுக்கு கரும்பு வழங்கும் விவசாயிகளுக்கு டன் ஒன்றுக்கு ரூ. 125 வீதம் கொடுக்க வேண்டும் என்று தமிழக அரசு மததிய அரசுக்கு பரிந்துரை செய்திருக்கிறது என அமைசசர் குழந்தைவேலு கூறினார்.



தமிழக சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின்போது அமைச்சர் குழந்தைவேலு ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் மேற் கண்டவாறு கூறினார்.

மேலும் அவர் கூறியதாவது:

இந்தஅரசைப்பொறுத்தமட்டில் சர்க்கரை ஆலைகளுக்கு கரும்பு வழங்கும் விவசாயப் பெருங்குடி மக்களுக்கு டன் ஒன்றுக்கு அதிகவிலை கொடுக்கவேண்டும் என்று நினைக்கிறது.

இப்போது கொடுக்கப்படும் குறைந்தபட்சவிலை டன்னுக்கு ரூ. 85 என்பதற்குப் பதிலாக ரூ. 125 வீதம் கொடுக்க வேண்டும் என்று நாம் மத்திய அரசுக்குப் பரிந்துரை செய்திருக்கிறோம்.

இன்றிருக்கக் கூடிய சூழ்நிலையிலே, மத்திய அரசின் விவசாய அமைச்சர் பானுபிரதாப் சிங் கரும்பினைப் பயிரிட வேண்டாம் என்று வெளிப்படையாகவே சொல்லக்கூடிய நிலை இருக்கிறது.

ஆனால் தமிழகத்திலே இருக்கக்கூடிய விவசாயப் பெருங்குடி மக்கள் ஒரு தடவை கரும்பு பயிரிட்டுவிட்டால் தொடர்ந்து 3 வருடங்கள் மறுதாம்பாக கரும்பு பயிரிடவேண்டிய சூழ்நிலை இருப்பதை நான் மத்திய விவசாய அமைச்சரிடம் எடுத்துச் சொல்லியிருக்கிறேன்.

## உடனடி வசூல்

ஆகவே தமிழ்நாட்டிலே உள்ள சர்க்கரை ஆலைகளுக்கு கரும்பு வழங்கும் விவசாயிகளுக்கு தற்பொழுது டன்னுக்கு ரூ. 85 என்று

(8-ம் பத்தி பார்க்க)

## தமிழ்நாடு முஸ்லிம் லீக் செயற்குழு

சென்னை, செப். 10-தமிழ்நாடு முஸ்லிம் லீக்கின் மாநில செயற்குழுவின் அவசரக் கூட்டம் சேலத்தில் முகம்மது பூரு அனிபா இல்லத்தில் இன்று நடைபெற்றது.

## *டெல்லி இமாம் சென்னை வந்தார்

சென்னை, செப். 10. டெல்லி இமாம் சையத்அப்துல்லாபுகாரி நேற்று காலை சென்னை வந்து சேர்ந்தார். அவர் தென்னகத்தில் 6 நாட்கள் சுற்றுப்பயணம் மேற்கொள்வார்.

# சஞ்சீவரெட்டி பிரதமர் ஆவார்?

புதுடெல்லி, செப். 10, குடியரசுத் தலைவர் சஞ்சீவ ரெட்டி பிரதமர் பதவி ஏற்கிறார் என்று பலத்தவதந்திகள் புதுடெல்லி வட்டாரத்தில் அடிபட்டன.

ஜனதாக் கட்சியின் பொதுச் செயலாளர் நானாஜிதேஷ்முக் குடியரசுத தலைவரை சந்தித்துப் பேசினார். தாம் பிரதமர் பதவியை மேற்கொள்ள 'விரும்புவதாகக் கூறப்பட்ட தகவல் தவறானது. இம்மாதிரி கருத்து எதையும் தாம் தெரிவிக்கவில்லை. அரசியல் அரங்கில் நுழையும் எண்ணமும் எனக்கு இல்லை என்று நானாஜிதேஷ் முக்கிடம் சஞ்சீவரெட்டி கூறினார்.

ஆயிரக்கணக்கானோர் என்னை அணுகி பிரதமர் ஆகவேண்டும என்ற யோசனையைத் தெரிவித்



தாலும் ஒருபோதும் பிரதமர் பதவியை நான் ஏற்க மாட்டேன் என்று சஞ்சீவ ரெட்டி கூறினார்.

இத்தகைய விரும்பத்தகாத விஷமத்தனமான பிரச்சாரம் பற்றி குடியரசுத் தலைவர் சஞ்சீவ் ரெட்டி வேதனையும் அதிருப்தியும் அடைந்திருப்பதாக நானாஜிதேஷ்முக் கூறியுள்ளார்.

அமைச்சர் பொன்னையன் வழங்கினர்

# விபத்தில் இறந்த வாலிபர் குடும்பத்துக்கு ரூ.10 ஆயிரம் நிதி உதவி

ஈரோடு, செப். 10- டவுன் பஸ் மோதியதால் இறந்த நெசவுத் தொழிலாளி கிருஷ்ணன் குடும்பத்திற்கு ரூ. 10 ஆயிரம் நிதியை நேரில் சென்று அமைச்சர் பொன்னையன் வழங்கினர்.

ஈரோட்டிலிருந்து எறையமங்கலம் டவுன் பஸ் பாப்பம்பாளையம் அருகே வந்தபோது மோதியதால் நெசவுத் தொழிலாளி கிருஷ்ணன் அதே இடத்தில் பரிதாபமாக மாண்டார்.

அமைச்சர் பொன்னையன் இறந்த கிருஷ்ணனின் வீட்டிற்கு நேரில் சென்று அவரது தந்தையார், உறவினர்களுக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்தார்.

அண்ணா போக்குவரத்துக்கழகச் சார்பில் அமைச்சர் பொன்னையன் ரூ. 10 ஆயிரத்தை விபத்து உதவித் தொகையாக கிருஷ்ணனின் தந்தை செங்கோடக் கவுண்டரிடம் வழங்கினர்.

அமைச்சகச் செயலாளர் ப. கோ. கிட்டு, சட்டப் பேரவை உறுப்பினர் தனபால் ஆகியோர் உடனிருந்தனர். செங்கோடன், அமைச்சருக்கும்முதலமைச்சருக்கும் நன்றி தெரிவித்தார்.

## சேலம் தீவிபத்து அமைச்சர் பார்த்தார்

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு நகர சபையில் வெள்ளாளப் பட்டி அருந்ததியர் தெருவில் சில நாட்களுக்கு முன்பு ஏற்பட்ட பயங்கரத் தீ விபத்தில் 12 குடிசைகள் எரிந்து சாம்பலாகின.

உடனடியாக வீடு இழந்தோருக்கு அரிசி, பருப்பு புதிய துணிகள் வழங்கப்பட்டன. ஒவ்வொரு குடும்பமும் வீடு கட்டிக்கொள்ள ரூபாய் 100 அன்றே வழங்கப்பட்டது.

தீப்பிடித்த இடத்திற்கு அமைச்சர் பொன்னையன் நேரில் சென்று பார்வையிட்டார். வீடிழந்த அருந்ததியர்களுக்கு ஆறுதல் கூறி விரைவில் அவர்களுக்கு வீடு கட்டித்தர ஏற்பாடு செய்வதாகவும் கூறினர்.



## ரூபாய் இரண்டரை லட்சம் செலவில் பணிமனை

சேலம் மாவட்டம் ஆத்தூரில் ரூ. இரண்டரைலட்சம் செலவில் அண்ணா போக்குவரத்துக் கழக பேருந்துகள் நிறுத்தும பணிமனை ஒன்று கட்டப்பட்டு முடியும் தருவாயில் உள்ளது

அந்தப் பணிமனையை போக்கு வரத்துத் துறை அமைச்சர் சி. பொன்னையன் அமைச்சகச் செயலாளர் ப. கோ. கிட்டு, சங்ககிரி சட்டப்பேரவை உறுப்பினர் தனபால் ஆகியோர் பார்வையிட்டார்கள். அண்ணா போக்குவரத்துக் கழக நிர்வாக இயக்குனர் சுப்பிரமணியம் பணிமனையைச் சுற்றிக் காண்பித்தார் சுமார் 50 பேருந்துகள் நிற்குமளவிற்கு சுமார் 4 ஏக்கர் நிலத்தில் இப்பணிமனை கட்டப்பட்டுள்ளது.

## திருமணங்கள்

சேலம் மாவட்டம், திருச்செங்கோடு புரட்சித்தலைவர் பொதுநலமன்ற பொருளாளர் இராசாவுக்கும் சாந்திக்கும் நடந்த திருமணத்தையும் ஒடுவம்பாளையத்தில் சந்திரனுக்கும் சம்பூரணத்திற்கும் நடந்ததிருமணத்தையும் அமைச்சர் பொன்னையன் நடத்திவைத்தார். அப்போது அவர் பேசியதாவது:

படித்தவர்கள் அதிலும்

(6-ம பததி பார்க்க)

தனியார் பஸ்களை

# அரசு மேற்கொள்ள கருணாநிதி கூடுதலாக கொடுத்த ரூ.17லட்சம் நிதி

சென்னை, செப் 10- தனியார் பஸ்களை மேற்கொண்ட போது, அந்த பஸ் உரிமையாளர்களுக்கு கருணாநிதி அரசு அதிக அளவில் நட்டஈடு கொடுத்துள்ளது கூடுதலாக கொடுத்த தொகைமட்டும் ரூ. 17.7 லட்சம்.

தனியார் பஸ்கள் அரசுடைமை ஆக்கப் பட்ட போது, எந்தத் தேதியில் அரசு அந்த பஸ்களைஏற்றுக் கொண்டதோ அந்த நாளில் உள்ள நடப்பு விலைக்கு நட்ட ஈடு கொடுக்க சட்டத்தில் வகை செய்யப்பட்டிருந்தது.

ஆனால்அரசுடைமை ஆக்கப் பெற்ற நாளில் உள்ள பஸ்ஸின் மதிப்புப்படி நட்ட ஈடு கொடுக்காமல் பேச்சு வார்த்தைகள் நடத்தப்பட்டிருக்கிறது என்பது முறையாகத் தோன்றவில்லை என்று தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை பொது நிறுவனங்கள் குழு தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது:

முசிறிப்புத்தனைத் தலைவராகக் கொண்ட இந்தக் குழுவின் அறிக்கையில் "சொத்துக்களை (பஸ்களை) எடுத்துக் கொண்ட தேதியில் இருந்து அவற்றுக்கு நட்ட ஈடு கொடுத்திருந்தால் ரூ. 17.7 லட்சம் குறைவாக நட்ட ஈடு கொடுத்திருக்க முடியும்" என்று கணக்காய்வுத்துறை தலைவர் கூறி இருப்பதை குழு கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

குறிப்பாக பட்டதாரிகள் அடுத்தவர்களிடம் வேலைக்குப் போகவேண்டும். அடுத்தவர்களைச் சார்ந்திருக்க வேண்டும். அரசு வேலைக்குத்தான் போக வேண்டும் என்ற எண்ணத்தில் இருக்கக்கூடாது.

4 அல்லது 5 படித்தமானவர்கள் கூட்டுறவு முறையில் சொந்தமாக சிறு தொழில் செய்ய முன் வரும்போது அவர்களுக்கு உதவுவதற்கு தமிழகத்தில் ஒவ்வொரு மாவட்டத்திலும் தமிழக அரசு ஒரு தொழில் மையத்தை நிறுவி வருகிறது.

## 15 மினி பஸ்கள்

திருச்செங்கோடு நகரைச் சுற்றியுள்ள கிராமங்களை நகர்ப்புறங்களோடு இணைக்கும் வகையில் புதிய சாலைகள் அமைத்து கிராமப்புற மக்கள் அன்றாடம் தனது விளைபொருட்களை நகரங்களுக்குச் சென்று விற்று பொருளீட்டவும் அவர்களுக்கு பொருளாதாரமறுமலர்ச்சிஏற்படும்வகையிலும் சுமார் 15 மினி பஸ்கள் விடப்படும் என்று அமைச்சர் பொன்னையன் தெரிவித்தார். விழாவிற்கு முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் டி. எம். காளியண்ணன் தலைமை தாங்கினார். திருச்செங்கோடு ஒன்றிய அமைப்பாளர் டி. நடேசன், நக அமைப்பாளர் சண்முகசுந்தரம், பொருளாளர் செல்வராஜ். தனபால், சங்ககிரி சட்டப்பேரவைஉறுப்பினர் மற்றும் அமைச்சுச் செயலாளர் ப. கோ, கிட்டு ஆகியோர் திருமணத்தில் கலந்துகொண்டு உரை நிகழ்த்தினார்கள்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

கொடுப்பதற்குப் பதிலாக ரூ. 125 வீதம் உயர்த்திக் கொடுக்கவேண்டும் என்று நான் கேட்டிருக்கிறேன்.

அருணா சர்க்கரைஆலையைப் பொறுத்தவரையில் அவர்கள்ஏற்கனவேசெய்து கொண்ட ஒப்பந்தப்படி நடந்துகொள்வதாக கூறி இருக்கிறார்கள். மேலும் அவ்வாலையில் விவசாயிகளுக்குச் சேரவேண்டிய பணம் ஒன்றரைக் கோடி ரூபாய்க்கு மேல் பாக்கி இருப்பதாகச் சொன்னார்கள். அப்படி பாக்கி இருந்தால் உடனடியாக வசூல் செய்து கொடுக்க இந்த அரசு நடவடிக்கை எடுக்கும்.

## ஒழுங்குமுறை விற்பனைக்கூடம்

பஞ்சாப் போன்ற மாநிலங்களில் ஒழுங்குமுறை விற்பனைக்கூடங்கள் தனித்தனியாக உள்ள நிர்வாக அமைப்புகளின்கீழ் செயல் பட்டு வருகின்றன.

ஆனால் இன்று தமிழ் நாட்டில் இருக்கக்கூடிய அதாவது 1959வது ஆண்டின் வேளாண்மைவிளைபொருள் விற்பனை சட்டப் பிரிவின் கீழே எந்த உட்பிரிவுகளையும் அமைப்பதற்குரிய அதிகாரம் இல்லை.

ஆகவே 1959- வது ஆண்டின் சட்டத்தை மீண்டும் திருத்தம் செய்து, அதற்குப் பின்னால் வடமாநிலங்களில் ஒழுங்கு முறை விற்பனைக் கூடங்கள் தனித்தனி அமைப்பின்கீழ்செயல்படுவது போல் மாற்றி அமைப்பது பற்றி யோசிக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு பதிலளிக்கையில் கூறினார்.

(8-ம்பத்திதொடர்ச்சி)

மார்க்கெட் போன்ற பகுதிகளுக்குப் பொருந்தக்கூடிய குறைந்தபட்ச ஊதியம் மூட்டைக்கு 25 பைசாகுட்ஷெட் தொழிலாளர்களுக்கும் கிடைக்கவும் ஏற்ற வகையில் துரித நடவடிக்கை எடுக்க வேண்டும். மேற்கண்டபடி பேரவைப் பொதுச் செயலாளர் வை. பெருமாள், கேட்டுக் கொண்டதற்கிணங்க விரைவில் ஆவன செய்வதாக அமைச்சர்தெரிவித்தார்.

# அரசியல் நெருக்கடி: மத்திய மந்திரிசபை அவசர ஆலோசனை

புதுடெல்லி செப. 10— நாட்டில் ஏற்பட்டுள்ள அரசியல் நெருக்கடியை பரிசீலிப்பதற்காக மத்திய அமைச்சரவை ஒரு மணி நேரம் அவசரமாக கூடி ஆலோசனை செய்தது



பொருளாதார நிலைமை பற்றியும் வெளிநாட்டுக் கொள்கைபற்றியும் சம்பந்தப்பட்ட விவகாரங்கள் குறித்தும் பிரதமர் மொரார்ஜிதேசாய் சக அமைச்சர்களுடன் ஆலோசனை செய்தார்.

அமைச்சரவையில்உள்ளவர்களை இரு பிரிவுகளாக பிரித்து பிரதமர் தேசாய் தனித்தனியாக ஆலோசனை நடத்தினார். ஆனால் இரண்டு கூட்டங்களிலும் ஜனதாக்கட்சித் தலைவர் சந்திரசேகர் விசேஷ அழைப்பாளராக கலந்து கொண்டார்.

முதல் பிரிவு அமைச்சரவை கூட்டத்தில் எல். கே. அத்வானி, வாஜ்பாயி, ஜார்ஜ் பெர்னாண்டஸ், மது தந்தவதே ஆகியோரும் கட்சி பொதுச் செயலாளர் நானாஜிதேஷ்முக்கும்கலந்து கொண்டனர்.

இரண்டாவது பிரிவு அமைச்சரவைக் கூட்டத்தில் ஜெகஜீவன்ராம் எச். எம். படேல்க் வாஜ்பாயி, பிஜூபட்நாயக மோகன்தாரியா ஆகிய அமைச்சர்கள் கலந்து கொண்டனர்.

விலைவாசிகள், அத்யாவசியபொருள்வினியோகம், உற்பத்தியைப் பெருக்குதல் ஆகிய பிரச்சினைகள் மட்டுமின்றி சமூக நீதியை உண்மையிலேயே ஏற்படுத்தக்கூடிய முறையில் பொருளாதார குவியல் சக்தியை குறைப்பது குறித்தும் அமைச்சரவைக்கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டது.

# அமைச்சர்ஆர்.எம்.வீ. தலைமையில் திரைப்பட இயக்குநர்கட்குபாராட்டு

சென்னை, செப். 10-குடியரசுத் தலைவரின் தங்கப் பதக்கம் பெற்ற தென்னக திரைப்பட இயக்குநர்களுக்கு சென்னையில்இன்று பாராட்டுவிழா நடக்கிறது.

தென்னிந்திய திரைப்பட இயக்குநர்கள் சங்க வார விழா இன்று 10-ந் தேதியிலிருந்து 17-ந் தேதி வரை நடக்கிறது. இதையொட்டி குடியரசுத் தலைவரின் தங்கப் பதக்கம் பெற்ற தென்னக இயக்குநர்கள் பழம்பெரும்திரைப்பட இயக்குநர்கள் ஆகியோர் பாராட்டு பெறுகின்றனர்.

இன்று மாலை 6 மணிக்கு வள்ளுவர் கோட்டத்தில் விழா தொடங்குகிறது. கருநாடக செய்தித் துறை அமைச்சர் கே. எச். சீனிவாசா துவக்கி வைக்கிறார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. விழாவுக்கு தலைமை வகிக்கிறார். கல்வி அமைச்சர் சி. அரங்கநாயகம் விழா மலரை வெளியிடுகிறார். பட அதிபர் பி.நாகிரெட்டி மலரின் முதல் பிரதியைப் பெற்றுக் கொள்கிறார்.

விழா முடிவில் தமிழ், தெலுங்கு, நடிகர் நடிகைகளின் கலை நிகழ்ச்சிகள் நடக்கின்றன. இதை இயக்குநர் எஸ். பி. முத்துராமன் தயாரித்து அளிக்கிறார்.

நடிகர்கள் ரஜனிகாந்த், நாகேஷ், சுருளிராஜன், மனோரமா, வி. எஸ். ராகவன், படாபட்ஜெயலட்சுமி, பிரபா, முரளிமோகன் ஆகியோர் இதில் கலந்துகொள்கின்றனர்.

# ரயில்வே குட்ஷெட் தொழிலாளர்களுக்கும் குறைந்தபட்ச கூலி: பேரவை கோரிக்கை

சென்னை, செப். 10- ரயில்வே குட்ஷெட்டில் பாரம் தூக்கும் தொழிலாளர்க்கும் குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்க வேண்டும் என்று அண்ணா தொழிற் சங்கப் பேரவை பொதுச் செயலாளர்வை. பெருமாள் அமைச்சர் ராகவனந்தத் திடம் விடுத்த கோரிக்கை:

நெற்றி வியர்வை நிலத்தில் விழ, அல்லும் பகலும் அயராது உழைத்தாலும், அடிமை வாழ்விலிருந்து விடுதலை கிடைக்கப் போவதில்லை. உழைப்புக்கேற்ற ஊதியம் ஒருநாளும் வரப் போவதில்லை என்ற ஏக்கப் பெருமூச்சில் பல்லாயிரக் கணக்கான பாரம் தூக்கும் தொழிலாளர்கள் தங்கள் வாழ்வை நடத்தி வந்தார்கள். அவர்களின் உழைப்பின் கடுமையை உணர்ந்த ஏழைகளின் இதயதெய்வம் புரட்சித் தலைவர் தேர்தல் வாக்குறுதியில் தெரிவித்தபடி பாரம் தூக்கும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதியத்தை அமலுக்குக் கொண்டு வந்திருக்கிறார். இதற்காக மூட்டை தூக்கும் தொழிலாளர்கள் சார்பில் இதயபூர்வமான நன்றியினை முதல்வர் புரட்சித் தலைவருக்கும் கழக அரசுக்கும் தெரிவித்துக் கொள்கிறோம்.

அதே நேரத்தில் மேற்படி குறைந்தபட்ச ஊதிய அறிவிப்பு ரெயில்வே குட்ஷெட் போன்ற பகுதிகளுக்கும் பொருந்தும்படி அறிவித்தால் ரெயில்வே குட்ஷெட் பகுதி மூட்டை தூக்கும் தொழிலாளர்கள்பெரிதும் பலன் அடைவார்கள். புரட்சித் தலைவர் ஆட்சிப் பொறுப் பேற்பதற்கு முன்னர் ஒரு மூட்டைக்கு 10 பைசா பெற்ற தொழிலாளர்கள் படிப்படியாக உயர்வு பெற்று 17 பைசா, 21 பைசா என்று பெற்று வருகிறார்கள். ஊதிய வித்தியாசத்தைப்போக்கவும் சந்தை

(7-ம் பத்தி பார்க்க)



'உனக்கும்வாழ்வு வரும்' படத்தில் மனோரமா.

## பூனைக்கும் காலம் வரும்

மூவிசித்ரா என்ற பட நிறுவனம் மேடையில் பிரபலமான 'பட்டம் பறக்குதய்யா' என்றநாடகத்தை திரைப்படமாகத் தயாரிக்கிறது. இப்படத்தில் ரவிச்சந்திரன், ஸ்ரீகாந்த், நாகேஷ், தங்கவேலு மூர்த்தி, படாபட் ஜெயலட்சுமி, ஆகியோர் நடிக்கிறார்கள். இப்படத்தின் பாடல்களை வாலி எழுத, இளையராஜா இசையமைக்கிறார். ஒளிப்பதிவை பெஞ்சமின் அமைக்க கதைவசனம் எழுதி டைரக்ட்செய்கிறார் கோடி. இப்படத்தை என். எஸ்.ராஜன் தயாரிக்கிறார்.

## பரங்கிமலை தெய்வம்

வசந்தா பிலிம்சார் ''பரங்கிமலைத் தெய்வம்'' என்ற படத்தை தமிழ்,மலையாளம் ஆகிய இரு மொழிகளில் தயாரித்துள்ளனர்.

புரட்சித் தலைவரின் மதுவிலக்குக் கொள்கையைத் தீவிரமாக பிரச்சாரம்செய்யும் விதத்தில் பல காட்சிகள் படமாக்கப்பட்டுள்ளன.

கதாநாயகனாக பத்மநாபன் நடித்துள்ளார்.

இப்படம் முழுவதும் புரட்சித்தலைவரின் புரட்சிக் கருத்துக்கள் நிறைந்துள்ளன. முற்றிலும் புதுமுகங்கள் நடித்துள்ள இப்படத்தில் கதாநாயகிகளாக குமாரி மம்தா, மில்தாஜ நடித்துள்ளனர்.

கவிஞர் தம்பியின் பாடல்களுக்கு ஆர். கே. என். முத்து இசையமைக்க எஸ். டி. டி. பாணி டைரக்ட் செய்ய ஏ.முத்துசாமி தயாரிக்கிறார்.

## கலை விருந்து

பருவப் பெண்களுக்கு தந்தையின் கண்டிப்பும், தாயின் கண்காணிப்பும் கட்டுப்பாடும் அரண்கள் போன்றவை என்று கருதுபவள் சுகுணா!

அவை அடிமை விலங்குகள்... வீடு தனக்கு ஒரு சிறைச்சாலை என்றுஎண்ணுபவள் இளையவள் ராதிகா.

ஆசைகூட வசதிக்குஏற்ப தான் இருக்க வேண்டும் என்று அடக்கத்தோடு நினைக்கிறாள் அக்காள்!

'ஆசைப்படுவதில்கூட வா கஞ்சத்தனம்?' என்று குடும்பநிலைக்கு மீறிய ஆசைகளை வளர்த்துக் கொண்டு அவை நிறைவேறாததால் வெறுப்பு, சலிப்புகுமுறலோடுராதிகா நடமாடுகிறாள்.

கட்டுப்பாடு என்ற விலங்கை உடைத்துக் கொண்டு, குடும்பம் என்ற சிறையிலிருந்து விடுவித்துக்கொண்டு அவள் வெளியேறுகிறாள். செல்வந்தர் ஒருவரது அறிமுகம் கிடைக்கிறது. அவள் சுதந்திரப் பறவையாகச் சுற்றித் திரிந்து, ஆடம்பரத்தை அனுபவிக்கிறாள். ஆனால் ஒழுக்கத்தில் அவள் நெருப்பாக இருக்கிறாள்.

வெறி பிடித்த மிருகங்கள் சில அந்த 'ஒழுக்கம்' என்ற நெருப்பை அணைத்துவிடுகின்றன. இழக்கக் கூடாததை இழந்துவிட்டதால் இனி இருக்கக்கூடாது என இறக்க நினைக்கிறாள். இந்த நிலையிலும் அவளை வாழவைக்க நெஞ்சுரத்தோடு வருகிறான் ஒருவன்.

மணமேடையில்அமர்ந்து மறுவாழ்வு கிடைக்கப் போகிறது என்று அவள் ஆவலோடு மணமகனுக்காக எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள். அப்போது... பிணக்கோலத்தில் அவனது உடல் வந்து சேருகிறது!

தன் வாழ்வு சிதைந்தது போல் அக்காவின் வாழ்வும் ஆகிவிடக் கூடாதென்று அவளுக்கு விருப்பம்போல் திருமணம் செய்து வைக்கிறாள்!

அவள் நிலை... முடிவு என்ன?'வயசுப்பொண்ணு' படத்தைப் பாருங்கள்!

### மணிமணியாக...

கதாபாத்திரங்கள்,கதையோட்டம் யாவும் மணிமணியாக இருக்கின்றன! மணியனின் கைவண்ணம் நம்மை உற்சாகத்தால் சிறகடித்துப் பறக்க வைக்கின்றது. (லவ் ரேர்ட்ஸ் அல்லவா!)

தோழிகள் வற்புறுத்தி அழைக்கும்போது 'வீட்டில் அப்பா திட்டுவார்' என்று மறுத்து விட்டு ராதிகா ஓடிவருவதும்...

பாயை உதறும்போது ''ஒரு பாயை உதறினால் ஒன்பதுபாய் உதிருது. தலையணையா...இது...இது...? பஞ்சு பிதுங்கி பல்லை இளிக்குது'' என்று கூறும்போதும்...

சமாதானம் சொல்லுகின்ற அக்காவிடம் சண்டைக்குப் போவதும்...

''ஸ்கூட்டரில் யாரோ தெரியாதவர் பின்னாலே சென்றேன்- அத்தான் பின்னால் தானே போனேன்? இது ஒருதப்பா?'' என்று சாவ சாதாரணமாகக் கேட்டு முணுமுணுப்பதும் ''இந்த நாட்டுக்குச் சுதந்திரம்வந்து முப்பது வருஷம் ஆச்சு. சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு இன்னும் சுதந்திரம் வரலே..! ஒரு பொண்ணு சுதந்திரமாக இருக்க முடியல்லே!'' என்றுசொல்வதும்... சுவையான காட்சிகள்!

தனியாக அறையில் இருக்கும்போது அத்தான் தவறான எண்ணத்தோடு நெருங்குவது போலவும், ரெயிலில் செல்வந்தர் தவறாகநடந்து கொள்ள முயற்சிப்பது போலவும் ராதிகா கற்பனை செய்வது...

### பலே சங்கர்...

இப்படி எத்தனையோ காட்சிகளை அடுக்கிக் கொண்டு செல்லலாம் கே. சங்கரின் திறமையான டைரக்ஷனுக்கு உதாரணமாக!

ஸ்கூட்டரில் வரும் முத்துராமனையும், ரோஜாரமணியையும், பஸ்ஸில் வந்துகொண்டிருக்கும் ராகவன் பார்ப்பதுபோல் எடுத்திருக்கும் காட்சியை இயற்கையாக..நன்கு படமாக்கி உள்ளதற்காக டைரக்டர் சங்கருக்கு ஒரு சபாஷ் போடலாம்! ஒரு முறை மட்டும்தானா பல முறை நம்மிடமிருந்து அவர் 'சபாஷ்களை' வசூல் செய்து விடுகிறார்!

### ஆர். கே. சண்முகம்

''வேப்பமரத்துக்குப் பக்கத்திலே இருக்கிறதினாலே கரும்பு கசக்கிறதில்லே''

இதுபோல் கருத்துள்ள மனதை உருக்கும் உரையாடல்கள், வெடிச் சிரிப்பை வரவழைக்கும் வசனங்களுக்குப் பஞ்சமே இல்லை. ஆர். கே. சண்முகத்தின் உரையாடல்கள் அடிக்கரும்பின் இனிப்பு! படத்தின் வெற்றிக்கு பேருதவியாக இருக்கின்றன இவை.

படத்தின் சிறப்பு அம்சங்களில் மற்றொன்று...ராஜாராம் ஒளிப்பதிவு! டெல்லியிலும் ஆக்ராவிலும் உள்ள அழகையெல்லாம் எவ்வளவு அற்புதமாய் படமெடுத்திருக்கிறார்!

பலாச்சுளை போன்ற பாடல்களை இசை என்ற தேனில் நனைத்துக் கொடுத்திருக்கிறார்.எம்.எஸ்.விஸ்வநாதன். 'காஞ்சிப் பட்டுடுத்தி', 'அதோ அதோ... ஒரு செங்கோட்டை' என்ற முத்துலிங்கத்தின் பாடல்களும் வாலியின் 'லக்கி லடுக்கி' பாடலும் இனிமையாக ஒலிக்கின்றன.

லதா அமைதியாக, அடக்கமாக வந்து அழகாக நடித்திருக்கிறார்! ஆசையோடு தங்கையைப் பார்க்க வந்து, அவள் தனக்கு யாரும் இல்லை என்று சொன்னதைக் கேட்ட பின்பும்...தங்கையின் ஒழுக்கத்தைப் பற்றி அறியும்போதும் அருமையாகச் செய்துள்ளார்!

ரோஜாரமணி யோகக்காரர்! வலுவான ஒரு கதாபாத்திரம்..நிறைய வாய்ப்பு கிடைத்திருக்கிறது! டைரக்டர் சங்கர் சரியாக வேலைவாங்கியிருக்கிறார்! ரோஜாரமணி கவர்ச்சியாக மட்டுமல்ல.. நன்றாகவும் நடித்திருக்கிறார்!

மற்றவர்கள் தவறாகக் கருதினாலும், தான் நல்லவன் தான் என்பதை உணர்த்தத்துடிக்கும்முத்துராமனின் நடிப்பு பல இடங்களில் முத்தாக ஒளி விடுகிறது! அருமையாக ஒரு சண்டை செய்துள்ளார்!

ஜெய்கணேஷ் பயந்து பயந்துகாதல் கடிதத்தை ரோஜாரமணியிடம் கொடுப்பதும், எழுந்து ஒடத்தயாராக இருப்பதும் வெடிச்சிரிப்பை எழுப்பும்.

எம். என். நம்பியார்... கண்ணியமுள்ளகனவானாக அருமையாக நடித்திருக்கிறார்!

தேங்காய் சீனிவாசன், வி. எஸ். ராகவன், சேகர் திருப்பதிசாமி, சிலோன் மனோகர், செல்வராஜ் 'சத்யா' ஹரி, ராஜசுலோசனா, எம். என். ராஜம், சகுந்தலா. அனுபமா, சி. ஆர். ராஜகுமாரி ஆகிய நட்சத்திர வரிசை நடிப்பிலும் மின்னுகின்றன.

கண்ணன் வருகின்ற காட்சிகள் குறைவு என்றாலும் நடிப்பினால் ஒரு நிறைவைஏற்படுத்துகிறார், சண்டைக் காட்சிகள் சிறப்பாகச் செய்துள்ளார்.

கிரேசி நடனம்கிளுகிளுப்பூட்டும்வகையில் உள்ளது.

பருவ எழிலினால் அலங்கரிக்கப்பட்ட வயசுப் பொண்ணே 'இளசுகளை' மட்டுமல்ல... எல்லோரையும் பார்க்க வைத்து விடுவாள்! அவளுக்கு ஆடை அணிமணிகள் அலங்காரம் வேறு செய்தால் எப்படி இருக்கும்!

'வயசுப்பொண்ணு' பாருங்கள்!

டைரக்ஷன்,உரையாடல், நடிப்பு, கதை, இசையமைப்பு, ஒளிப்பதிவு, போன்ற சிறப்புகள் இந்த வயசுப்பொண்ணின் வனப்பைக் கூட்டும் அலங்காரங்களாக உள்ளன!

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வகையில் கலை விருந்தாக 'வயசுப் பொண்ணு' படத்தை அளித்த குஞ்சப்பன் பாராட்டுக்குரியவர்.

-நாகை தருமன்






## அகிலா

அமுத சித்ரா [illegible] சார் கோவி. [illegible]வின் 'அகிலா' [illegible] கதையை படமாகத் த[illegible]ரிக்கின்றனர்.

ஜெய்கணேஷ், பிரமிளா, சிவச்சந்திரன், சுஜாதா, மாஸ்டர்ஸ்ரீதர், புதுமுகம் இந்து, வெங்கட், செந்தி[l] ஆகியோர் நடிக்கின்றனர்.

கோவி. மணிசேகரன் கதை வசனம் எழுதுகிறார். விஸ்வநாதன் இசை அமைக்கிறார்.

கே.எம்.பாலகிருஷ்ணன் டைரக்ட் செய்கிறார்.

பி. ஏ. சிவஞானம், சுப்புராஜ் தயாரிக்கின்றனர்.

## பத்து நாட்களில் படம்எடுத்த டைரக்டர்

பத்தே நாட்களில் ''கண்ணேகனிமொழியே'' என்ற பெயரில் படம் ஒன்றை உருவாக்கியுள்ளார் டைரக்டர் டி. எம். திருமலைசாமி நாடார்.

கனி மொழியாக லட்சுமிஸ்ரீ நடித்துள்ளார். சி. எல். ஆனந்தன், நஞ்சை அசோகன், ரஜினி, ஒருவிரல் கிருஷ்ணாராவ், ஏ. வீரப்பன், நிர்மலா, நளினி, புதுமுகம் சிவசங்கர் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

கதைவசனம் எழுதி நஞ்சை பி. பெரியசாமி தயாரிக்கிறார். பால்ராஜ் ஒளிப்பதிவு செய்துள்ளார்.

அமராவதி சினி கிரியேஷன்ஸ் தயாரிக்கும் இந்தப் படம் ஒரு பேய்க்கதை! கடந்த மாதம் 18ம்தேதிதொடங்கி 27ம் தேதிக்குள் படப்பிடிப்பு முழுவதையும் டைரக்டர் திருமலைசாமி நாடார் முடித்துவிட்டார்.



அழகுபடுத்திக்கொண்டு அலங்காரமாகநடிக்கத்தான் நடிகையர் ஆசைப்படுவார்கள் நல்ல வேடம் என்பதற்காக தன்னை அலங்கோலப்படுத்திக் கொண்டு இப்படி நடிக்கிறார் லட்சுமிஸ்ரீ

## முத்துலிங்கம் பாடல் ஒலிப்பதிவு

''கோடாலிக்கொண்டை போட்டு
கொறநாட்டு சேலைகட்டி
மலையோரம் போவ
தெங்கே மானேபெண்
குயிலே''

என்ற முத்துலிங்கம் எழுதிய இப்பாடலை டி. எம். சவுந்தரராஜன், எஸ். ஜானகிபாட, சங்கர்கணேஷ் இசையில் விஜயராஜா கம்பைன்ஸாரின் 'மாம்பழத்து வண்டு' படத்திற்காக ஏவி. எம்மில் ஒலிப்பதிவானது. ஜெய்கணேஷ் சத்யப்பிரியா இணைந்து நடிக்கும் இப்படத்தில் அம்முகுட்டி, வலம்புரி நாகராஜன் புதுமுகம் சதிஸ்ரீ. ஒய். ஜி. மகேந்திரா, சரத்பாபு, ஆகியோரும் நடிக்கின்றனர்.

ஆர். எம். சுப்பையாவின் கதைக்கு, இருகூரான் வசனம் எழுத நெல்லை எஸ். எஸ். மணி ஒளிப்பதிவை கவனிக்க, ஆர். எம். சுப்பையா, சேதுசுந்தரம் தயாரிக்கும் இப்படத்தின் டைரக்ஷன் பொறுப்பை ஆர். சி. சக்தி ஏற்றுள்ளார். இதன் படப்பிடிப்பு தொடர்ந்து நடைபெறுகிறது.

## ஒரே முத்தம்

லலிதா கோல்டன் மூவிஸார் தயாரிக்கும் வண்ணப் படமான ''நெருப்பிலே பூத்தமலர்'' படத்தின் பெயர் ''ஒரே முத்தம்'' எனமாற்றிவைக்கப்பட்டுள்ளது இப்படத்தில் ஜெய்கணேஷ்,சுமித்ரா, ஸ்ரீகாந்த், மேஜர் சுந்தரராஜன், மனோரமா, சுருளிராஜன், ஏ சகுந்தலா, எஸ். ஆர். சுட்ரமணியம் சுஜேந்திரகுமார் ஆகியோர் நடிக்கின்றனர்.

கண்ணதாசன் பாடல்களுக்கு இளையராஜா இசையமைக்கிறார். சி ஏ. மூலிலன், கதை, வசனம் எழுதி டைரக்ட்செய்கிறார். இப்படத்தை எஸ் ஆர் சுப்ரமணியம் தயாரிக்கிறார்.

## நிர்மலா நடிக்கும் பால்காரி

மீனாட்சிஇந்திராபிலிம்ஸ் என்ற பட நிறுவத்தினர் ''பால்காரி'' என்ற பெயரில் புதிய படமொன்றைத் தயாரிக்கின்றனர் ஸ்ரீகாந்த் வெண்ணிற ஆடை நிர்மலா திருமுருகன், ஆலம், ரவிகுமார்,சுருளிராஜன்,அசோகன்,சச்சு,பண்டரிபாய்,சந்திரன் பாபு ஆகியோர்நடிக்கின்றனர்.

டி. பானு ஒளிப்பதிவை கவனிக்க சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர்.

டி. சிவகுருநாத பிள்ளை தயாரிக்கும் இப் படத்தின் கதையை ரவிகுமார் எழுத திரைக்கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்புகளை பழம்பெரும் டைரக்டர் கே. சோமு ஏற்றுள்ளார்.

இதன் படப்பிடிப்பு மதுரையில் தொடங்கியது. அதில் திருமுருகன், ஆலம், அசோகன் ஆகியோர் கலந்துகொண்டு நடித்தனர். இப்படம் முழுவதும் மதுரையில் எடுக்கப்படுகிறது.

# ஸ்டுடியோக்களில்...

## ஆருத்ரா தரிசனம்

அமிர்தாலயாவின் சார்பில் திருத்துறைப்பூண்டி என். என். கல்யாணம் சுந்தரம் 'ஆருத்ராதரிசனம்' என்ற பெயரில்பக்திப்படம் ஒன்றைத் தயாரிக்கிறார்.

கதை, திரைக்கதை வசனம், டைரக்ஷன்ஆகிய வைகளை வியட்நாம் வீடு சுந்தரம் கவனிக்கிறார்.

குன்னக்குடி வைத்தியநாதன் இசைஅமைக்கிறார். அந்தப்படத்தில் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனின் நாதசுர இசையையும் வலையப்பட்டி சுப்பிரமணியத்தின் தவில் ஓசையையும்கேட்டு இன்புறுவதுடன் அவர்களையும் பார்த்து மகிழலாம்.

ஏவி.எம், 'சி' ஒலிப்பதிவுக் கூடத்தில் விநாயக சதுர்த்தியன்று நடைபெற்ற துவக்க விழாவிற்கு வந்த பத்திரிகையாளர்களுக்கு மட்டுமின்றி வந்த பிரமுகர்கள் அனைவருக்கும் மாலை அணிவித்து வரவேற்றனர்.

குன்னக்குடி வைத்தியநாதனும் வியட்நாம் வீடு சுந்தரமும் தாங்கள் இந்த அளவிற்கு வளர்ந்ததற்கு பத்திரிகையாளர்கள் முக்கிய காரணம் என்று தெரிவித்தனர்.

(பரவாயில்லையே... இப்படியும் சிலர் திரையுலகில் மதிக்கத் தெரிந்தவர்கள்- நன்றியுள்ளவர்கள்- இருக்கிறார்களே என்று மனதிற்கு ஆறுதலாக இருந்தது).

## கங்கை அவள் கண்ணுக்குள்

யுனைடெட் டெக்னீஷியன்சார் 'கங்கை அவள் கண்ணுக்குள்' என்ற பெயரில் படம் ஒன்றைத்தயாரிக்கின்றனர்.

'கண்ணுக்குள் கங்கை' என்ற தலைப்பைப் பார்த்தவுடனேயே கதாநாயகியாக நடிப்பது யார் என்பது உங்களுக்குப் புரிந்திருக்குமே...?

சுஜாதாதான் கதாநாயகி,

ரவிச்சந்திரன், ஜெய்கணேஷ், அனுமந்து,காந்திமதி, சரோஜா ,லாவண்யா வேபிசுதா ஆகியோர் நடிக்கின்றனர்.

வியட்நாம்வீடு சுந்தரம் வசனம் எழுதுகிறார், சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர்.

கதை, திரைக்கதை டைரக்ஷனை ஜெகதீஷ் கவனிக்கிறார்.

## பகலில் ஒரு இரவு

முரளி மூவிசார் 'பகலில் ஒரு இரவு' என்ற பெயரில் படமொன்றைத் தயாரிக்கின்றனர். இதற்கான துவக்கவிழா அருணாசலம் ஸ்டுடியோவில்இளையராஜாவின் இசையமைப்பில்கண்ணதாசனின்பாடல் ஒலிப்பதிவுடன் தொடங்கியது.

ஷெரீப் எழுதியுள்ள கதைக்கு மகேந்திரன்உரையாடல்களை எழுதுகிறார்.

விஜயகுமார், ஸ்ரீதேவி, சீமா, மேஜர்சுந்தரராஜன் சுருளிராஜன் ஆகியோர் நடிக்கின்றனர்.

ஐ. வி, சசி டைரக்ட் செய்கிறார். ராமச்சந்திரன் தயாரிக்கிறார்.



ஒரே வானம், ஒரே பூமி' படத்தில் அமெரிக்க நடிகர் ஜோ., கே. ஆர். விஜயா.

## சந்திரத்தில் ஒரு ராத்திரி

காதலனோடு தனியாகச் சென்று ஒரு ஓட்டலில் தங்கியிருக்கும் கல்லூரி மாணவி இன்னொருவனின் பருவப்பசிக்கு பலியாகிறாள். தந்தையின் கோபத்துக்கு ஆளான அவள் ஆசிரியையைத்தேடிச்சென்று அவள் அரவணைப்பில் இருக்கிறாள். அவளுக்கும் ஒருவன் வாழ்வுதரவருகிறான். அவள் முதலில் மறுக்கிறாள். பின்னர் அவனது பண்பு கண்டு இணங்குகிறாள்.

சோமன், சுகுமாரன், ரவிமேனன், பிரதாப்சந்திரன். மம்தா, அடூர் பவானி கவியூர் பொன்னம்மா, மஞ்சு பார்கவி, மஞ்சுஷா ஆகியோர் நடித்துள்ளனர்.

மலையாளம், தமிழ், இந்திப்படங்களில் இந்த அளவுக்கு கவர்ச்சியின் எல்லைக்குச் சென்றதில்லை என்று கூறும்படி ஒருகாட்சி அமைந்துள்ளது. நல்ல தொரு சண்டைக்காட்சியும் உண்டு.

சங்கரன் நாயர் பொழுது போக்கு அம்சங்களுடன்

எக்ஸ்-ரே

மட்டுமன்றி, கருத்துள்ள படமாகவும் இதனை உருவாக்கியுள்ளார்.

ஏசுதாஸ்,மாதுரி, சுசீலா பாடல்கள் இனிமையாக உள்ளன.தேவராஜன்இசையமைத்துள்ளார்.

## மீண்டும் மின்னல்கொடி

இண்டர்நேஷனல்மூவிஸ் என்ற பட நிறுவனத்தினர் ரவிச்சந்திரன் பிரவீணா இணைந்து நடிக்கும் மின்னல்கொடி என்ற புதிய வண்ணப்படத்தினைத்தயாரிக்கின்றனர்.

எம்.எஸ். வசந்தி, எம். ஆர். ராதா, மனோரமா சுருளிராஜன்,வி.கே. ராமசாமி ஆகியோர் நடிக்கின்றனர்.

எம். கிருஷ்ணசாமி ஒளிப்பதிவைகவனிக்கிறார். புலமைப்பித்தன், மருதகாசிபாடல்களுக்கு சங்கர்-கணேஷ் இசையமைக்கிறார்கள். பி. ஏ. குமார் வசனம் எழுத திரைக்கதை டைரக்ஷன் பொறுப்பினை டி. பி. சுந்தரம் ஏற்றுள்ளார். ரங்கநாயகி அருணாசலம் தயாரிக்கின்றனர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை. சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்; பி.தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரிசாலை, சென்னை 600014.
ஆசிரியர்:எம்.ஜி.சக்கரபாணி



'மீனாட்சி குங்குமம்' படத்தில் விஜயகுமார், ஸ்ரீப்ரியா



'சீர்வரிசை' படத்தில் முத்துராமன், டைகம.

சந்தா விவரம்
1 வருடச சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600014



# அண்ணா




# சாதிகள் ஒழிப்புக்கு நிரந்தரசட்டம்: ஈ. ஆர். கிருஷ்ணன்வற்புறுத்தல்

**புதுடெல்லி, செப். 10- சாதி ஒழிப்புக்கு நிரந்தர சட்டம் எப்போது இயற்றப்படும் என்று மாநிலங்களவையில் ஈ. ஆர். கிருஷ்ணன் கேட்டார்.**

மாநிலங்களவையில் இது பற்றி கழக உறுப்பினர் ஈ.ஆர்.கிருஷ்ணன் மேலும் பேசியதாவது:

தாழ்த்தப்பட்டமக்களுக்கும், ஆதிதிராவிட மக்களுக்கும், மற்ற இந்து சமுதாய மக்களுடன் சேர்ந்து முன்னேறத் தேவையான உதவிகள் செய்யப்பட்டு வருகின்றன என்று அவ்வப்போது அமைச்சர்கள் சொல்லி வருகிறார்கள். நஷ்டஈடு கொடுப்பது உள்ளிட்ட பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் இதுபோன்ற அறிவிப்புகள் வெறும் சம்பிரதாய முறைகளாக அமைந்துவிட்டன. நாமும் இந்த அவையில் இந்தப் பிரச்சினை குறித்து விவாதிக்கிறோம்.

இப்படிப்பட்ட விவாதங்கள் வரும்போதெல்லாம் இங்கும் சரி, மாநில சட்டமன்றங்களிலும்சரி, எதிர்க்கட்சி உறுப்பினர்கள் ஆளுங்கட்சியைக் குற்றஞ் சாட்டி வருவதும், ஆளுங்கட்சியினர் தேவையான நிவாரண நடவடிக்கைகள் ஏற்கனவே எடுக்கப்பட்டுள்ளன என்று அறிவிப்பதும் ஒரு சம்பிரதாயமாகவே அமைந்துள்ளது.

ஜூலை 24ம் நாள் ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்த 12 பேர்கள் வகுப்புகலவரங்கள் காரணமாக தமிழ்நாட்டிலுள்ள விழுப்புரத்தில் கொலையுண்டது பற்றிய செய்தி கிடைத்த உடன் மாவட்ட ஆட்சித் தலைவர் மூலம் பாதிக்கப்பட்ட மக்களுக்கு எல்லா உதவிகளும் கிடைக்க உத்தரவிடப்பட்டது. அமைச்சர்கள் ஆர்.எம்.வீ., சவுந்தரபாண்டியன் ஆகியோரை எங்கள் முதல்வர் சம்பவ இடத்திற்கு அனுப்பி வைத்து நடவடிக்கைகளை மேற்பார்வையிடச் செய்தார். அவர்கள் அங்கு இரண்டு நாட்கள் இருந்து எல்லா வகுப்புகளைச் சார்ந்த மக்களையும் சந்தித்து அவர்களோடு விவாதித்ததுடன் பாதிக்கப்பட்ட இடத்தில் அமைதியும் ஏற்படச் செய்தனர்.

இந்த கலவரங்களுக்கு உண்மையான காரணத்தை கண்டறிய எங்கள் அரசு ஓய்வுபெற்றஉயர்நீதிமன்ற நடுவர் சதாசிவம் அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒருநபர் குழுவை நியமித்து முழு விசாரணை நடத்த ஏற்பாடு செய்துள்ளது.

கலவரம் ஏற்பட்ட பகுதியைப் பார்த்தபிறகு ஜனதா கட்சியின் தலைவர் சந்திரசேகர் அங்கு நடைபெற்ற கலவரங்களுக்கு எவ்வித அரசியல் காரணங்களும் இல்லையென்று சொன்னார்.

அவர் பாதிக்கப்பட்ட மக்களைச்சந்தித்து எடுக்கப்பட்ட நடவடிக்கைகளைப் பார்த்து திருப்தி அடைந்தார்: தேவையான மத்திய அரசின் உதவிக்கும் உறுதி கூறினார்.

பிறப்பின் காரணமாக ஒருவன் தன்னை உயர்ந்தவன் என்றோ தாழ்ந்தவனென்றோ கூறிக்கொள்ளக் கூடாதென்றார் எங்கள் தலைவர் அறிஞர் அண்ணா. வகுப்புக் கலவரங்கள் எந்த இடத்திலும் நடக்கக் கூடாது என்பதில் தமிழ்நாடு அரசு மிகுந்த கவனம் செலுத்துகிறது.

நமதுநாடு விடுதலை அடைந்து 30 ஆண்டுகள் ஆகிறது. ஆதிதிராவிட பழங்குடி மக்களின் நிலைமை இன்னமும் அப்படியே இருக்கிறது. இந்த வகுப்பாரின் குறைகளைத் தீர்க்க மத்திய அரசு எடுத்த நடவடிக்கைஎன்ன?

## தீண்டாமை ஒழிப்பு

தமிழர்களுக்குள் தீண்டப்படாதவர்களோ, சமுதாயத்தில் கீழ் நிலைப்பட்டவர்களோ இருக்கக்கூடாது என்பது எங்கள் கொள்கையாகும். இதனைநிறைவேற்ற எங்கள் மாநில அமைச்சர்கள் எந்தவித கௌரவமும், தனிமரியாதையும் பார்ப்பதில்லை. அவர்கள் பேசுவதை காரியத்தில் செய்துகாட்டுபவர்கள். எங்கள் புரட்சித் தலைவர் இந்த விஷயத்தில் மிகவும் தீவிரமாக உள்ளார்.

இந்த சமூகப் புரட்சியில் எங்கள் அரசுக்கு எந்த அளவிற்கு உதவி செய்யப் போகிறீர்கள் என்று அமைச்சர்களைக் கேட்டுக் கொள்கிறேன். சாதி முறையை ஒழிப்பதற்கு சட்டத்தில இடமில்லையா?

தீண்டாமையை ஒழிப்பதற்கு அமைச்சர் நிரந்தர நடவடிக்கை ஏதேனும் எடுக்கப்போகிறாரா? நாம் வேறு அணைத்திற்கும் திட்டமிடுகிறோம். அதுபோல் ஜாதிகளை இந்திய சமுதாயத்திலிருந்துஒழிக்க எப்படிநிரந்தரதிட்டமிடப் போகிறோம்? மாநிலங்களுக்கு அதிகஅதிகாரங்கள் கொடுத்தால் தீண்டாமையை ஒழிப்பதற்கு திட்டமிட சாத்தியமாகலாம். எனவே இப்பிரச்சினைக்கு நிரந்தரப் பரிகாரம் காண வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மேற்கண்டவாறு ஈ. ஆர் கிருஷ்ணன் கூறினார்.



---

## மீனவர் பயிற்சி நிலையம்

### கடலூர்

கடலில் சென்று மீன் பிடிக்கும்மீனவர்களுக்கு இயந்திரப் படகு உபயோகிப்பது, சிறிய படகுகளை பராமரிப்பது, மரைன் இயந்திரம் படகுகள் மூலம் மீன் பிடித்தல் ஆகியவைகளில் பத்துமாதகாலத்திற்கு பயிற்சி பெறுவதற்காக குறிப்பிட்ட பாரங்களில் விண்ணப்பங்கள் கோரப்படுகின்றன.

விண்ணப்பதாரர்கள் 35 வயதிற்கு மேற்படாதவராகவும் 18 வயதிற்கு குறையாதவர்களும்எழுதப்படிக்கதெரிந்தவர்களாகவும், நல்ல தேக ஆரோக்கியம் உள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்.

பயிற்சி காலத்தில் தேர்ந்தெடுக்கப்படுபவர்களுக்கு மாதம் ரூபாய் 50 (ரூபாய் ஐம்பது) மட்டும் உபகாரச் சம்பளமும், மீன் பிடிக்க கடலுக்கு செல்லும் தினங்களில் நாள்ஒன்றுக்கு 0.50 (ஐம்பது பைசா மட்டும்) படியும் அளிக்கப்படும்.

தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் இந்த இலாக்காவுடன் ஓர்ஒப்பந்தம்செய்துகொள்ள வேண்டும். தென்னாற்காடு மாவட்டத்தை சேர்ந்த மீனவர்கள் மட்டுமே கடலூரில் நடத்தப்படும் பயிற்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள்.

விண்ணப்ப பாரங்களும், சேர்வதற்கான தகவல்களும் குறிப்பீடு வேண்டியவர்கள் மீன்துறை உதவி இயக்குனர், மீனவர் பயிற்சி நிலையம், கடலூர்-3 அவர்களிடமிருந்து இலவசமாகப் பெற்றுக் கொள்ளவும். விண்ணப்ப பாரத்தின் தலைப்பில் 'நவீன மீன்பிடிபயிற்சி' என்று எழுத வேண்டும். நேர்முகத் தேர்வின் தேதியும் இடமும் அவர்களுக்கு முன் கூட்டியே தெரிவிக்கப்படும். பயிற்சிநிலையத்தில் மீன்பிடிப்பதற்காகபடகுகளில்போகும்போதுஏற்படக்கூடிய எதிர்பாராத விபத்திற்கு அரசு பொறுப்பல்ல.

விண்ணப்பங்கள் மீன் துறை உதவி இயக்குனர், மீனவர் பயிற்சி நிலையம், கடலூர்-3 என்ற விலாசத்திற்கு 20-9-78க்குள் தபால் மூலமாகவோ அல்லது நேரிலோ கிடைக்கும்படி அனுப்பி வைக்கவேண்டும்.

(ஒ-ம்)
மீன்துறை துணை இயக்குனர்
(மண்டலம்)
சென்னை-600 006

DIPR 34176-78-27-ARIES

---

# அரசுக்கு துணையாக ஆக்கப் பணிபுரியும் அரிமா சங்கம்

## அமைச்சர் பி. டி. சரஸ்வதிபாராட்டு

**சென்னை, செப். 10— எந்த கட்சி ஆட்சியில் இருந்தாலும் மக்களுடைய எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்வது என்பது இயலாத காரியம் சமூக நலப்பணியில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டுள்ள அரிமா சங்கத்தினரையும் லியோ கிளப்பினர்களையும் பாராட்டுகிறேன் என்று அமைச்சர் பி. டி. சரஸ்வதி கூறினார்.**

சென்னை ஆள்வார்பேட்டையில் லியோ கிளப், (இளம் சிங்கங்கள்) சார்பில் நடைபெற்றகுழந்தைகளுக்கான கண், காது, மூக்கு, தொண்டை பரிசோதனை முகாமை துவக்கிவைத்து பேசியபோது அமைச்சர் பி. டி. சரஸ்வதி மேற்கண்டவாறு கூறினார்.

விழாவிற்கு வி. சி. ராஜு தலைமை வகித்தார். மாவட்ட அரிமா சங்க கவர்னர் டாக்டர் எம்.எஸ். ஏகாம்பரம் வரவேற்புரை ஆற்றினார். மருத்துவக்கல்வி இயக்குநர் டாக்டர் ஞானசேகரன், டாக்டர் காமேஸ்வரன் ஆகியோரும் விழாவில் பேசினார்கள். இறுதியில் அடையாறு இளஞ்சிங்கங்கள் சங்கச் செயலாளர் முரளி நன்றி கூறினார்.

முகாமை துவக்கிவைத்து அமைச்சர் பி.டி. சரஸ்வதி கூறியதாவது:

குழந்தைகள் மருத்துவ மனைகளில் சென்று நீண்ட 'கியூ' வரிசைகளில் நின்று மருத்துவ பரிசோதனை செய்யவேண்டிய நிலை இல்லாமல், குழந்தைகளைத்தேடி வந்து அவர்களுக்குள்ள கண், காது, மூக்கு, தொண்டை சம்பந்தப்பட்ட வியாதிகளை பரிசோதனை செய்து மருத்துவ சிகிச்சை அளிக்கிற லியோகிளப், அரிமா சங்கம் போன்றவற்றை நான் மனப்பூர்வமாக பாராட்டுகிறேன்,

### உதவி

எந்த கட்சி ஆட்சியில் இருந்தாலும் பொதுமக்கள் அத்தனை பேருடைய எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்வது என்பது இயலாத காரியம்.

அந்தவகையில் அரசிற்கு உதவியாக அரும்பணியாற்றும் பொது நல அமைப்புகளை நான் மீண்டும் ஒரு முறை தமிழக அரசின் சார்பில் பாராட்டுகிறேன்,

இவ்வாறு அமைச்சர் பி. டி. சரஸ்வதி பேசும்போது கூறினார்.

### கட்டிடத்திறப்பு

தாம்பரம் தொகுதி துரைப்பாக்கத்தில் 22ஆயிரம்ரூபாய் செலவில்கட்டப்பட்ட பள்ளி கட்டிடத்தை அமைச்சர் பி.டி. சரஸ்வதி திறந்து வைத்தார்.

விழாவிற்கு கிண்டி அரிமா சங்கத் தலைவர் மூத்தா தலைமை வகித்தார். ஊராட்சித் தலைவா நடராஜன் வரவேற்புரை ஆற்றினார்.

மாவட்ட அரிமா சங்க கவர்னர் டாக்டர் ஏகாம்பரமும் விழாவில் கலந்து கொண்டார்.

### இன்சூரன்ஸ்

தமிழ்நாடு கோழி அபிவிருத்தி நிறுவனத்தின் தீவன ஆய்வுக்கூடத்தையும் ஐ. எஸ். ஐ. அத்தாட்சி அளிப்பது சிறு விவசாயிகளின் கோழிவளர்ப்புத்திட்டத்தில் கோழிகளுக்கு ஈட்டுறுதி அளிக்கும் திட்டம் ஆகியவற்றை அமைச்சர் பி. டி. சரஸ்வதி துவக்கிவைக்கிறார்.

விழாவிற்கு சபாநாயகர் முனுஆதி தலைமை தாங்குகிறார். வரும் 12ந் தேதி (செவ்வாய்) ஓட்டல் பாம்குரோவ் மண்டபத்தில் இந்த விழா நடைபெறுகிறது.

---

நல்லோரை போற்றும்நன்றிமறவாகழக அரசு

# தேசிய கவிஞன் பாரதியாருக்கு எடுக்கும் விழா

**சென்னை, செப். 10— "பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலை என சங்கநாதம் முழங்கி ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்" என்று பள்ளுப்பாடிய பாட்டுக்கொரு புலவனும பாரதியின் நினைவு நாளை தமிழக அரசு நாளை (செப்டம்பர் 11) சிறப்பாக நடத்தி அஞ்சலி செலுத்துகிறது.**

இந்தியத் திருநாட்டின் தென்கோடியில் தோன்றி இந்தியவிடுதலைப் போராட்டத்தின் தாரகையாய் விளங்கிய மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் நினைவுநாள் செப்டம்பர்.

### பிறவிக் கடமை

மறைந்த தலைவர்களுக்கும், பல்வேறு துறைப் பெருமக்களுக்கும் மரியாதைசெய்வதைப்பிறவிக் கடமையாகக் கருதும்புரட்சித்தலைவரின் கழக அரசு அப்படிப்பட்ட மேன்மக்களுக்கு விழா எடுத்து வருவதை நாடறியும்.

தமிழக அரசின் சார்பில் நாளை (திங்கட்கிழமை) மகாகவி பாரதியாரின் நினைவுநாள் கொண்டாடப்படுகிறது.

சென்னை அண்ணாசாலையிலுள்ள ராஜாஜி மண்டபத்தில்நாளை (11 ஆம் தேதி) மாலை 6மணிக்கு நடைபெறும் இவ் விழாவிற்கு கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ. கே. தலைமை வகிக்கிறார்.

டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், சிலம்பொலி சு. செல்லப்பன், நா. பார்த்தசாரதி கே. ராமமூர்த்தி ஆகியோர் பேசுகிறார்கள்.

உணர்ச்சியும், உத்வேகமும் ஊட்டும் பாரதியாரின் பாடல்களை இவ் விழாவில் கே. வரதராசன் பாடுகிறார்.

### பத்திரிகைகுழு

சென்னை, செப். 10- தமிழ்நாடு சட்டமன்ற பத்திரிகையாளர் ஆலோசனைக் குழுவில் உறுப்பினர்களாக அண்ணா நாளிதழ் பிரதம நிருபர் வீ. ரங்கநாதன், 'நீதியின் குரல்' நாளிதழ் பிரதம நிருபர் பி. ராமகிருஷ்ணன் ஆகியோர் நியமிக்கப் பட்டுள்ளனர்.

---

# புரட்சித்தலைவர் முழக்கம்

(முதல்பக்கத் தொடர்ச்சி)

பேசினார்கள்.

முதல்வர் புரட்சிதலைவர் வியாசர்பாடி திருமணத்திற்குச் செல்ல வேண்டியிருந்ததால் பாவலர் மா. முத்துசாமியை தலைமை ஏற்கச் செய்தார்.

திருமண விழாவிற்கு அமைச்சர்கள் ஆர்.எம். வீ., ராகவானந்தம் பெ. சவுந்தரபாண்டியன், பொன்னையன், சுப்புலட்சுமி, குடிசை மாற்று வாரியத் தலைவர் பி. ராமபத்திரன், டி. கே. சீனிவாசன் மற்றும் நாடாளு மன்ற உறுப்பினர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் மேலவை உறுப்பினர்கள் பிரமுகர்கள் ஆகியோர் வந்திருந்தனர்.

மணவிழாவுக்கு வந்திருந்தவர்களை ஜேப்பியார் வரவேற்றார்.

விழா முடிவில் மணமகன் மூத்துராமலிங்கம் நன்றி கூறினார்.

## கருணாமூர்த்தி திருமணம்

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் ஜெயங்கொண்டம் சட்டமன்ற கழக உறுப்பினர் வெ. கருணாமூர்த்திக்கும்வனிதாவுக்கும் திருமணம் இன்று (ஞாயிற்றுக்கிழமை) காலை சென்னை அடையாறு ஏ. கே. எஸ். திருமண மண்டபத்தில் நடந்தது.

ஜேப்பியார்வரவேற்றார். அமைச்சர்கள் கே. ஏ. கே. சுப்புலட்சுமி ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசியபின் முதல்வர் புரட்சித் தலைவர் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

"இன்றைக்கு சீர்திருத்தப் புரோகிதராக நான் மாற்றப்பட்டிருக்கிறேன் என்றால் அந்த அளவுக்கு உயர்த்தியதற்குக் காரணமான பேரறிஞர் அண்ணாவுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். இங்கே பேசிய எனக்கு மாலை அணிவித்த நண்பர் ஒருவர் என்னைக் குறிப்பிடும்போது முதல்வா என்று அழைத்தார்.

பதவியும்பணமும் வரும் போகும். எப்போது வரும் எப்போது போகும என்று யாருக்கும் தெரியாது.

ஆனால் மக்களின் நல்லெண்ணம் ஒன்று தான் நிலைத்து நிற்கும். அதைத்தான் புகழ் என்று சொல்கிறோம். அன்புஎன்று குறிப்பிடுகிறோம் அன்பு ஒன்றுமட்டும்தான் நீண்ட காலத்துக்கு நிரந்தரமாக உண்மையாக நிலைத்து நிற்கும்.

அன்பை விலை கொடுத்து வாங்கமுடியாது அன்பைப் பெறுவதற்கு தியாகம் செய்யவேண்டும்.

தியாகம் என்று குறிப்பிடும்போது உயிரை விடுவது என்று அர்த்தம அல்ல பிறரை வாழவைப்பது என்பது பொருள். தன்னைவாழவைத்துக்கொள்வதைவிட மற்றவர்களை வாழவைப்பதற்குப் பெயர்தான் தியாகம். தான்மட்டும வாழ்வதோடு மற்றவர்களையும் வாழ வைக்க வேண்டும். அந்தவகையில் அன்பு உள்ளம் கொண்டவர்களாக மணமக்கள் வாழ வேண்டும்.

இன்றைக்கு இத்தனை பேர் நமக்குச் சொந்தம் என்ற உணர்வு சிந்தனை மணமக்களுக்குவரும். அந்த அளவுக்கு மணமக்களுக்கு வாழ்த்தும் ஆசியும் இருக்கிறது.

ஆனால் இதை எப்படி காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை உணர்ந்து மணமக்கள் செயல்பட வேண்டும்.

செய்கிற தீமை நன்மைக் கேற்ப பிரதிபலன்கள் கிடைத்து விடுகிறது.

மணமகனின் பெயர் கருணாமூர்த்தி. சிறப்பான பெயர்.

(சிரிப்பு)

நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். அண்ணா சொன்னது என் நினைவுக்கு வருகிறது.

கண் இல்லாதவர்களுக்கு கண்ணப்பன் என்றும் அறிவே இல்லாதவர்களுக்கு அறிவொளி என்றும் பெயர் வைத்து விடுகிறார்கள்.

ஆனால் மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரியது என்கிற அளவுக்கு வெற்றிக்கு சொந்தக்காரர் கருணாமூர்த்தி. அவரை வெற்றிக்குச் சொந்தக்காரராக்கிய கொள்கைகளுக்கும் அவர் சொந்தக்காரர்.

ஜாதிமத பேதம் கிடையாது என்ற கொள்கைக்கு சொந்தக்காரர்கள் தான் அண்ணாவின் உண்மைத் தம்பிகளாக முடியும்.

மணமக்கள் பல்லாண்டு நலமுடன் வாழ வாழ்த்துகிறேன்.

இவ்வாறு முதல்வர்புரட்சித்தலைவா கூறினார்.

தொடக்கத்தில் மணமகன் கருணாமூர்த்திபுரட்சிதலைவருக்கு ஆளுயர ரோஜாமாலை அணிவித்தார். விழா முடிந்ததும் கருணாமூர்த்தி நன்றி கூறினார்.

## புரட்சித்தலைவர் இல்லத்தில் நடந்த திருமணம்

காவாங்கரை கழக கிளைச் செயலாளர் எஸ். எம்.சாமியின் மகள் சுசீலாவுக்கும் கழகத்தோழர் எஸ். பி. மூர்த்திக்கும் திருமணம் நடந்தது இந்தத் திருமணத்தை முதல்வர் புரட்சித் தலைவர் ராமாவரத்தில் உள்ள தனது இல்லத்தில் நடத்தி வைத்தார்.

ஜேப்பியார், சிகாமணி எம். எல். ஏ, மற்றும் திரளான கழகத்தோழர்கள் திருமண விழாவில் கலந்துகொண்டனர்.

சென்னை 41வது வட்ட மறுபிறவி எம், ஜி. ஆர். மன்ற தலைவர் ஸ்டான்லி சண்முகம் மகள் பிரேமாவுக்கும், முனுசாமிக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் இன்று திருமணம் நடைபெற்றது.

---